10 - 1 வே. வு -

# திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் 8-8-74 ஆம் தேதியன்று ரிஷிகேசத்தில் நிகழ்த்திய உபந்யாஸம்

# குருபக்தி

*திருவடியும்தண்டையும்சிலம்பும்சிலம்பூடுருவப்*
*பொருவடி வேலும் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்*
*மருவடிவான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்*
*குருவடி வாய்வந்தென் உள்ளம் குளிரக் குடிகொண்டவே.*

நம பார்வதி பதயே!

ஹர ஹர மகாதேவ!!

எல்லாம் வல்ல வயலூர் ஞான பண்டிதன் கருணையால் இங்கே எழுந்தருளியிருக்கின்ற சுவாமி சிவானந்த குருபரர் திருவடிகட்கும், சுவாமி சிதானந்தா திருவடிகட்கும், சுவாமி கிருஷ்ணானந்தா முதலிய பெரியோர்கட்கும், தாய்மார்கட்கும் சிறியேனுடைய நன்றி நிறைந்த வணக்கம்.

இப்போது, "குருபக்தி" என்பது பற்றி சிறிது நேரம் பேச மேற்கொள்கின்றேன்.

பக்தி மூன்று வகைப்படும்; ஈஸ்வரனுக்கு நேராகச் செய்யும் பக்தி ஈஸ்வர பக்தி; அடியார்களுக்குச் செய்யும் பக்தி அடியார் பக்தி; ஆச்சாரியாரிடம் செய்யும் பக்தி குருபக்தி. சுருக்கமாகச் சொன்னால், (1) சிவபக்தி (2) ஜங்கம பத்தி (3) குரு பக்தி என்று சொல்வார்கள்

இந்த மூன்றிலே மிகவும் சிறந்தது குருபக்தி. "என்ன காரணம்?" என்று சொல்லப் போகிறேன்.

ஆண்டவன் கருணை யாண்டும் நீக்கமற நிறைந்து இருக்கிறது. இந்த இடத்தில்தான் இறைவனுடைய கருணை இருக்கிறது; இவ்விடத்தில் இறைவனுடைய கருணை இல்லையென்று சொல்ல முடியாதபடி, எங்கும் பரந்தும் விரிந்தும் இருக்கிறது.

அந்தக் கருணையைப் பெற வேண்டுமானால் ஆச்சாரியார் மூலமாகத்தான் சுலபமாகப் பெற முடியும். ஒரு சிறிய உதாரணம் சொல்கிறேன்.

120 டிகிரி வெயில்; சுடும் வெயில். அங்கு இந்த வேஷ்டியை வைத்தால், சுடுமே தவிர, எரிந்து வெந்து போகாது. சூரிய காந்தக் கண்ணாடி என்ற ஒன்று உண்டு. அந்தச் சூரிய காந்தக் கண்ணாடியை வெயிலில் வைத்து அதன் கீழ் வருகிற மற்றொரு வெயிலில் வேஷ்டியை வைத்தால், தீ 'திக்'கென்று பிடித்துக் கொள்ளும். இந்த வெயிலுக்கு வேஷ்டியைக் கொளுத்துகின்ற ஆற்றல் கிடையாது; ஆனால், சூரிய காந்தக் கண்ணாடிக்குக் கீழ் வரும் வெயில் வேஷ்டியைத் தகனம் பண்ணி விடுகிறது. என்ன காரணம்? ஐம்பதாயிரம் கிரணங்களைத் தன்பால் ஈர்த்து, அனுப்புகிறது சூரிய காந்த கண்ணாடி.

நேராக வரும் வெயில் மாதிரி இறைவனைக் குறித்துச் செய்யும் பக்தி; சூரிய காந்தக் கண்ணாடியின் கீழ் வருகின்ற வெயில் மாதிரி குருபக்தி.

குருநாதர் பல வருடங்கள் தவம் செய்து அந்தத் திருவருளைச் சேர்த்து வைத்திருக்கிறார். அதனை தன் சீடனுக்கு பாய்ச்சி விடுகிறார். ஆகையினால்தான் சிவபக்தியைக் காட்டிலும் குருபக்தியே சிறந்தது என்று பெரியவர்கள் சொல்லுகிறார்கள்.

அருணகிரிநாதர் மிகவும் பெரியவர். அவர் ஐம்பத்தொரு அனுபூதி பாடல்களைப் பாடினார். மந்திர சாத்திரமாக ஐம்பத்தொரு அக்ஷரங்களும் ஐம்பத்தொரு அனுபூதி பாடல்களைப் பாடினார். அதில் கடைசிப் பாட்டு உங்களுக்குத் தெரியும்.

''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!'' என்று சொல்லுகிறார். ஆண்டவனைக் குருவாக வந்து அருள்செய் என்று சொல்லுகிறார்.

மாணிக்கவாசகருக்கு எம்பெருமான் குருநாதராக வந்தார். குருந்த மர நிழலில் - திருப்பெருந்துறையில். ஆகவே,

இறைவன் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்குக் குருநாதனாக வருவார்.

மற்றொன்று, ஆச்சார்யனும் நம்மைப் போலத்தான் உண்டு, உடுத்து இருப்பார். அவரை நம்மைப் போல நினைக்கக் கூடாது. எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களிலே தோன்றிய எல்லாப் பிராணிகளும் உண்டு வெளியே வந்தால் மலம் என்று பெயர். ஒரு பிராணி மட்டும் உண்டு, கழித்தது மலம் என்று பெயரில்லை. அது புனிதமானது; எது? பசுவின் சாணம். பூசை வீட்டிலே அதைக் கொண்டு மெழுகுகிறோம்; சுவாமிக்கும் பஞ்ச கவ்யமாக அபிஷேகம் பண்ணுகிறோம்; இதோ இந்தத் திருநீறு பசுவின் மலத்தால் ஆனது. குழந்தைகள் வெளிக்குப் போனால், பசும் சாணம் போட்டுத் தான் மெழுகுகின்றோம். ஆகையினாலே, பிற மலங்களைப் போக்குவதற்காக அமைந்தது பசுவின் மலம். குருநாதனுடைய உடம்பு பசுவின் மலம் போலே. நம்முடைய கருமேனியைச் சுத்திகரிக்க வந்தது குருநாதரின் திருமேனி. ஆகவே, நம்மைப் போலத் தானே அவரும் இருக்கிறார் என்று எண்ணிவிடக் கூடாது.

*தெய்வத்தினிடத்துச் செய்த பாபம் ஆச்சாரியனிடத்துத் தீரும்; ஆச்சாரியனிடத்துச் செய்த பாபம் எங்கும் தீராது. அதற்கு முடிவே கிடையாது. ஆகவே, சிவபக்தியைக் காட்டிலும் குரு பக்தியே உயர்ந்தது. அதற்கு ஒரு சிறிய உதாரணம் சொல்கிறேன்.*

ஆச்சாரியன் ஞானத்தின் சொரூபம். ஞானம் எங்கேயாவது கடையிலே விற்குமா? என்னோடு நூறு பேர் யாத்திரைக்கு வந்திருக்கிறார்கள். எங்கு போனாலும் சாமான் வாங்குவது தான் வேலை. கம்பளி-அது-இது, பெட்டி, படுக்கை, கூடை; இரயிலில் இடமே கிடையாது. இதை வேடிக்கையாகச் சொல்லவில்லை.

தங்கத்தை விலைக்கு வாங்கலாம்; வைரத்தை விலைக்கு வாங்கலாம்; துணிகள் வாங்கலாம்; நிலம் வாங்கலாம்; பங்களா வாங்கலாம்; கார் வாங்கலாம்; ஞானத்தை எங்கே யாவது விலைக்கு வாங்க முடியுமா? ஞானம் ஷாப் (Shop)

என்று ஒன்று இருக்கிறதா? ஐந்து கண்டத்திலே எங்கேயாவது ஞானம் விற்கிறதா? அந்த ஞானத்தை கொடுப்பவர் குருநாதர்.

துன்பத்திற்குக் காரணம் எது? அஞ்ஞானம். இன்பத்திற்குக் காரணம் ஞானம். சுருக்கமாகச் சொல்கிறேன்; அஞ்ஞானம் இருக்க இருக்கத் துன்பம் இருக்கும். இத்துன்பம் நீங்க என்ன செய்ய வேண்டும்? அஞ்ஞானத்தைப் போக்க வேண்டும். அஞ்ஞானம்—தமஸ்; இருள் அது; ஞானம்-ஒளி; ஞானப் பிரகாசம். ஞானவொளி என்று சொல்லுவார்கள். ஒளி என்ன செய்யும்? மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

இரண்டாவது திரைப்படக் காட்சியைப் பார்த்துவிட்டு வீட்டுக்கு வந்தார்; மின் விளக்கு வீட்டிலே எரிகிறது; ஆனால், வெளியிலே மின்விளக்கு அணைந்துவிட்டது; உடனே வீட்டிலும் மின் விளக்கு அணைந்துவிட்டது. தீப்பெட்டி இருக்கும் இடம் தெரியவில்லை. என்ன செய்வது? அப்படியே இருக்க வேண்டியது தான். மனைவியைப் பார்த்தார்; "ஜானகி! தீப்பெட்டி எங்கே?" "நான் பார்க்கவில்லை" அப்பொழுது ஒரு டார்ச் லைட் இருந்தால், எத்தனை நன்மை உண்டாகும்? அப்படி வாழ்விலே உண்டாகிற அஞ்ஞானமான இருளுக்கு ஞானவொளியைக் கொடுப்பவர் குருநாதர்.

அவர் கை வைத்தால் ஞானம் வந்து விடுகிறது. இராம கிருஷ்ணபரமஹம்ஸர், விவேகானந்தர் மீது கையை வைத்தார்; ஞானம் விவேகானந்தருக்கு வந்துவிட்டது அவர் உட்கார்ந்த இடம் தொண்ணூற்றேழு இலட்சக் கட்டிடம்; அவர் உட்கார்ந்த இடம் கன்னியாகுமரி; (சிரித்த பாபம்) அவர் கை வைத்ததும் ஞானம் வந்துவிட்டதா? எத்தனை நாட்களாக ஞானத்தை வாங்கி வைத்திருந்தார்? ஒரு ஐம்பது வருடங்களாக ஞானத்தை வாங்கி வைத்திருந்தார்.

அப்பா பணம் சேர்த்தார்; ஒரு நாள் தன் மகனிடத்தில் சாவி கொடுத்தார்; "இந்தா அப்பா! ஏழு இலட்சம்" அப்படி ஆயுள் முழுவதும் பாடுபட்டு ஞானத்தைச் சேகரித்து, குரு சீடனிடத்தே சுலபமாகக் கொடுக்கிறார். எவ்வளவு பெரிய உபகாரம்! ஆசையினாலே ஞானத்தை விலைக்கு வாங்க முடியாது; ஞானத்தைக் கொடுக்கிறவர் ஞான குருநாதர்.

எல்லோருக்கும் குருபக்தி அவசியமாகும். குருநாதரை நினைக்க வேண்டும்; வணங்க வேண்டும். குருநாதர் இருந்த திசை நோக்கிப் பக்தி செய்ய வேண்டும்.

மற்றொன்று அயோத தௌமியர் என்ற குருநாதர் ஒருவர் கங்கைக் கரையிலே இருந்தார்; அங்கு ஒரு குருகுலம் வைத்து நடத்தினார்; அயம் என்றால் இரும்பு; இரும்பு போன்ற உறுதியான தசையுடையவர் என்பது அவர் பெயருக்குப் பொருள்; ஓராயிரம் சீடர்கள் படிக்கிறார்கள்; அவர்களிலே முதல் மாணவன் ஆருணியென்பது; அவன் பாஞ்சால நாட்டு இராஜகுமாரன்; அங்கேயே சாப்பாடு; அக்காலத்தில் ஒரு வேளைதான் சாப்பாடு; இப்பொழுதெல்லாம் மூன்று வேளை சாப்பாடு.

ஒரு வேளை சாப்பிடுபவன் யோகி; இரு வேளை சாப்பிடுபவன் போகி; மூன்று வேளை சாப்பிடுபவன் ரோகி; நான்கு வேளை சாப்பிடுபவன் போகி - இறப்பவன். எவ்வளவு ஆகாரத்தைக் குறைக்கிறார்களோ அவ்வளவு சௌக்கியமாய் இருப்பார்கள்; ஆகாரம் அதிகமாகச் சாப்பிட்டால் துன்பப்படுவார்கள். நீண்ட நாள் வாழ்வதற்கு வள்ளுவரும் வழி சொல்கிறார்.

*"அற்றல் அளவறிந்(து) உண்பான் அஃதுடம்பு*
*பெற்றான் நெடிதுய்க்கு மாறு" (குறள்.)*

எனக்கு வயது அறுபத்தொன்பது; இதுவரை டாக்டர் வந்ததுமில்லை; ஊசி போட்டதுமில்லை. சிதானந்தா சுவாமி கூட "யாத்ரீகர்கள் எல்லாம் சௌக்கியமாக இருக்கின்றீர்களா?" என்று கேட்டார். ஆகாரத்தை கண்ட்ரோல் (Control) பண்ணினால், நமக்கு ஏன் வியாதி வருகிறது? பசித்தால் ஒழிய சாப்பிடக் கூடாது. இன்றிலிருந்து ஒரு விரதம் வைத்துக் கொள்ளுங்கள்; மணியைப் பார்த்துவிட்டுச் சாப்பிடக்கூடாது. எட்டு மணிக்குச் சாப்பிடு வேன்; இரண்டு இட்டிலி; ஒரு காபி. ஒரு நண்பர் வந்தார் 9 மணிக்கு. கொஞ்சம் ஆகாரம் செய்யுங்கள் என்றால் தயவு தாட்சண்யம் இல்லாமல் உட்காரக் கூடாது. அவரே சொன்னால் எப்படி தள்ளிவிடுவது? என்று

இடியாப்பம், தோசை, பூரிமசால் மீண்டும் சாப்பிட்டால் வியாதி வரும். ஒரு சிறிய உதாரணம்.

நம்முடைய வீட்டில், அப்பா, அம்மா, குழந்தை ஆகிய மூன்று பேர் இருக்கிறார்கள். கால்படி அரிசி போட்டு உலையிலே வெந்து கொண்டிருக்கிறது; மூன்று பேர் திடீரென்று வந்துவிட்டார்கள், என்ன செய்வது? முன்பு வெந்து கொண்டிருக்கும் உலையிலேயே மீண்டும் 1/2 படி அரிசியைக் கழுவிப் போடுவார்களா? அதை வடித்து விட்டு வேறு உலை வைப்பார்களா? பெண்களுக்குத் தெரியும். பாதி வெந்திருக்கும் என்று அதிலே கழுவி அரிசியைப் போடமாட்டார்கள். எட்டு மணிக்குப் போட்ட ஆகாரம் வெந்து கொண்டிருக்கும் போது, ஒன்பது மணிக்கு மீண்டும் போடுவார்களா? பெண்களுக்குத் தெரிந்த நியாயம் ஆண்களுக்குத் தெரிய வேண்டாமா? ஒரு சாப்பாட்டிற்கும், மறு சாப்பாட்டிற்கும் இடையில் ஐந்து மணி நேரம் இருக்க வேண்டும். எவன் ஒருவன் நாவை வெல்லுகிறானோ அவன் சாவை வென்று விடுவான். உணவு நெறி இன்றியமையாதது. இன்னும் ஒரு முறை அந்தக் குறளின் கருத்தைச் சொல்கிறேன்; கேளுங்கள்; நன்றாக ஜீரணம் ஆன பின்பு அவன் வயதிற்கேற்றபடி அளவாகச் சாப்பிட்டால், இந்த உடம்பொடு நெடிது காலம் வாழலாம் என்று வள்ளுவர் சொல்கிறார்.

அதனால், குருகுலத்திலே ஒருவேளை தான் சாப்பாடு; ஆனால், பிள்ளைகள் எல்லாம் அழகாகப் படிக்கிறார்கள்.

காலை 9 மணிக்குப் பாடம் நடந்தது. அயோததௌமியர் அந்த இராஜகுமாரனைக் கூப்பிட்டார். "ஆருணி! நமக்குச் சொந்தமான வயலிலே மடை உடைபட்டு, வெள்ளமாகத் தண்ணீர் ஓடுகிறது: அந்த மடையை அடைத்து விட்டு வா" என்றார்; இராஜகுமாரனுக்கு வயலிலே வேலை வைத்தார். நமது பிள்ளைகள் என்ன செய்யும்? "அந்தக் கோனார் பையனை அனுப்புங்கள்; எனக்குப் பழக்கமில்லை" என்று சொல்லி, எதிர் நீச்சல் போடுவார்கள்.

அவன் 'குரு வார்த்தைக்கு மறு வார்த்தை இல்லை" என்று, மண்வெட்டியைத் தூக்கிக் கொண்டு வயலுக்குப்

போனான்; அரண்மனையிலே வளர்ந்தவன்; மண்ணை வெட்டி வெட்டிப் போட்டான். மடை அடைபடவில்லை; மடை உடைந்து கொண்டே இருக்கிறது; காலை முதல் மாலை வரை வேலை செய்தான்; மடை அடைபடவே இல்லை; "குருநாதன் சொன்ன வேலையை - இட்ட கட்டளையை நிறைவேற்றாமல் நான் திரும்பிப் போகலாமா? இந்த சரீரம் வேண்டுமா?" என்று மண்வெட்டியை மடையிலே போட்டுவிட்டு, "குருநாதா!" என்று குறுக்கே படுத்துவிட்டான்; அங்கு வருகின்ற தண்ணீர் அவனைத் தாண்டுவதற்கு அஞ்சி, அப்படியே டேம் (Dam) மாதிரி தேங்கி நின்றது.

இரவு 8 மணிக்குப் பாடம் சொல்லித் தருகின்ற பொழுது, முதலிலே உட்காருகின்ற பையனைக் காணோம்; "ஆருணி எங்கே?" என்றார்; "காலையிலே போனவன் இன்னும் காணோம்" என்றனர் மற்ற மாணாக்கர்கள். அந்தக் காலத்தில் டார்ச் லைட் கிடையாது; தீவட்டி எடுத்துக் கொண்டு போகிறார்; அந்த வய்லுக்குப் போய், "ஆருணி!" என்றார்; "சுவாமி! அடியேன் தண்ணீருக்குள் இருக்கிறேன்" என்றான்; "ஏனப்பா!" என்றார்; "காலையிலிருந்து மாலை வரை மடை அடைத்தேன்; மடை அடைபடவில்லை; மடையில் படுத்துவிட்டேன்; சுவாமி!" என்றான். "உன்னையே தியாகம் செய்து விட்டாய்! எழுந்து வா" என்றார்; அப்படியே கங்கையை பிளந்து கொண்டு வந்து விட்டான். அவன் தலையிலே கையை வைத்து, "எல்லா ஞானமும் வந்துவிட்டது. போய் விட்டு வா" என்றார். ஒரு விநாடியிலே ஞானம் கொடுத்தார். ஆச்சாரியன் கண்ணாலே பார்த்தால் ஞானம் வந்துவிடும். அப்படிப்பட்டவர்கள்தான் ஆச்சாரியர்கள்.

அடுத்த மாணவன் உபமன்யு; பிராமணப் பையன்; வியாக்கிரபாதரின் மகன்; வஷிஸ்டரின் தங்கை மகன்; செக்கச் சிவந்த நிறமுடைய பையன். "உபமன்யு!" என்றார் குரு; "சுவாமி!" என்றான்; "குருகுலத்திற்குச் சொந்தமான ஐம்பது பசுமாடுகளை நீ மேய்த்துக் கொண்டு வா" என்றார்; மாடு மேய்க்கிற வேலையை ஐயர் வீட்டுப் பிள்ளைக்குக்

கொடுத்தார்; ஆச்சாரியார் சொன்னால் அது வேதவாக்கு. ஐம்பது பசு மாடுகளை ஓட்டிக் கொண்டு, பகல் எல்லாம் மேய்த்து விட்டு, மாலையில் தொழுவத்தில் கட்டிவிட்டு இரவு 9 மணிக்குச் சாப்பாட்டிற்குப் போனான். தவசு பிள்ளை, "உனக்குச் சாப்பாடு போடக் கூடாது என்பது குருநாதர் உத்தரவு," என்றான்; எப்படி இருக்கும்? சிறிய பையன்; பகலெல்லாம் மாடு மேய்த்த பையன்; 'சரி' என்று, பட்டினியாய் இருந்து விட்டான். ஒரு வாரம் முடிந்தது; ஆள் நன்றாக கொழுகொழு என்று இருக்கிறான். இது அன்னமய கோசம்; சாப்பாடு இல்லையென்றால் ஒன்றும் கிடையாது; ஏகாதசி நாள் என்றாலும் பலகாரம் உண்கின்றார்கள்.

முன்னொரு நாள் குருநாதர் இருக்கும்போது வந்தோம்; சுவாமியினிடத்து (சிவானந்தா மகராஜ்) உத்திரவு பெற்று, பத்திரிநாத், கேதாரநாத் எல்லாம் போய்விட்டு, இங்கு ரிஷிகேசம் வந்து சேர்ந்தோம்; அன்றைக்கு ஏகாதசி; குருநாதர் அந்த ரோடிலே (Road) இருந்தார்; எங்களைப் பார்த்தார்; "ஓ!வந்து விட்டீர்களா? இன்றைக்கு ஏகாதசி; யாருக்கும் சாப்பாடு கிடையாது" என்று சொல்லிவிட்டு, அங்கிருந்த ஒருவரிடம் "வாரியாருக்கும் உடன் வந்தவர்களுக்கும் சாம்பார், ரசம் வைத்துச் சாப்பாடு போடு" என்றார். அவ்வளவு பிரியம் அவருக்கு; குதிப்பார்கள்; அவ்வளவு மகிழ்ச்சி; எங்களைக் கண்டால் குதிப்பார்கள்; ஏகாதசி நாளன்று எங்களுக்குச் சாப்பாடு; என்கூட வந்தவர்களுக்கெல்லாம் இருபது நாட்களாக சாப்பாடு சரியில்லை. ஒவ்வொருவருக்கும் ஐந்து, ஆறு அப்பளங்கள்; அருமையான சாப்பாடு; இன்னும் எங்களுக்கு ஞாபகம் பசுமையாய் இருக்கிறது.

ஆகவே, விரதம் ஒரு நாளைக்கே என்று சொன்னாலும், உடம்பு வாடிவிடும். சில பேர் அன்னம் சாப்பிடுவதில்லை; மற்றவையெல்லாம் சாப்பிடுவார்கள்; ரொட்டி, பழம், பால் முதலியன சாப்பிடுவார்கள்.

இந்தக் குழந்தை ஒரு வாரம் ஆகியும் வாடவில்லை. "உபமன்யு! இங்கே வா" என்றார்; 'இங்கே உனக்குச் சாப்பாடு போடுவதில்லை; ஆனால், உடம்பு நன்றாக இருக்கிறதே',



குருதேவ் சிவானந்தருடன் திருமுருக கிருபானந்தவாரியார் 4.12.54



ரிஷிகேசம் சிவானந்த ஆசிரமத்தின் கங்கை நதிக்கரையில் ஆசிரமத் தலைவர் சுவாமி சிதானந்த மஹராஜ் & சுவாமி நிர்மலானந்தருடன் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் (8.8.1974)

என்றார்; "கற்கை நன்றே கற்கை நன்றே; பிச்சை புகினும் கற்கை நன்றே. நான் போய்க் கிராமத்தில் பிச்சை எடுத்துச் சாப்பிடுகின்றேன்." "ஓ! பத்து வீட்டுச் சாப்பாடு நன்றாக இருக்கும்; நான் உன்னைப் பிச்சை எடுக்கச் சொன்னேனா?" "பிச்சை எடுக்க வேண்டாமென்று சொன்னீர்களா?" "சரி, இனிமேல் பிச்சை எடுக்கிற சாப்பாட்டை இங்கேயே வைத்து விட்டுப் போய்விட வேண்டும்" என்றார். எப்படி சோதனை? பிச்சை எடுத்தார் பெருமாள்; அதைப் பிடுங்கித் தின்றார் அனுமார்; எப்படி வாழ்க்கை? அப்பொழுதும் உபமன்யுவின் முகம் வாடவில்லை. குருநாதர் வயிற்றில் அடிக்கிறார்; குருநாதர் சொன்னால் வேத வாக்கு.

இன்னும் ஒரு வாரம் ஆயிற்று; ஆள் மொழு மொழு என்று இருக்கிறான். "கொண்டு வருகின்ற சாப்பாடு எல்லாம் இங்கே தான் வைத்து விட்டுப் போகிறான்; ஆனாலும் உடம்பு நன்றாக இருக்கிறதே" என்றார். அதற்கு உபமன்யு "இரண்டாம் தடவை பிச்சை எடுக்கின்றேன்" என்றான். நீயே திரும்பத் திரும்ப பிச்சை எடுத்தால், மற்றவர்கட்கு இடையூறு அல்லவா? இனிமேல் இரண்டாம் தடவை பிச்சை எடுக்காதே என்றார்.

இன்னும் ஒரு வாரம் ஆகியும் சரீரம் வாடிப போகவில்லை, "உபமன்யு! சாப்பாட்டுக்கு என்ன செய்கிறாய்?" என்றார். "கன்றுகள் பால் சாப்பிட்ட பிறகு, பசுக்கள் தானாகப் பால் சொரிகிறது; கையில் வாங்கிச் சாப்பிடுகிறேன்" என்றான். பாலிலே A, B, C, D வைட்டமின்கள் எல்லாம் இருக்கின்றன. "கீழே போனாலும் போகட்டும் சாப்பிடாதே" என்றார். எப்படி சோதனை? இந்த காலத்து மாணவர்களாய் இருந்தால், குருநாதர் ஒழிக! குருகுலம் ஒழிக! என்று கத்துவார்கள். அப்பொழுதும் உபமன்யுவின் முகம் வாடவில்லை. ஆச்சாரியனைத் தெய்வமாக நினைத்தான்.

இன்னும் ஒரு வாரம் ஆகியும் உபமன்யுவின் உடம்பு நன்றாக இருந்தது. "கண்ணா! நீ என்னடா சாப்பிடுகிறாய்?" என்றார். "கன்றுகள் பால் சாப்பிட்டபின் வாய் அசைக்கும்;

அப்போது வரும் நுரையை எடுத்துச் சாப்பிடுவேன்'' என்றான். ''அதையும் சாப்பிடாதே; வேறு எதையும் சாப்பிடாதே; தண்ணீரையும் குடிக்கக் கூடாது; காட்டிலேயுள்ள பச்சிலைகளையோ, காய், கனிகளையோ சாப்பிடக் கூடாது'' என்றார். மூன்று நாளிலே உடம்பு வாடிவிட்டது. குருநாதர் பட்டினி போட்டுக் கொல்கிறார். தாய் சேயை அடித்தால், அந்தக் குழந்தை இந்திராகாந்தியிடத்திலா போய் ''விசாரணைக்குக் கமிஷன் வை'' என்று சொல்லும்? அல்லது, போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று ரிப்போர்ட் செய்யுமா? ''அம்மா!'' என்று அம்மாவினிடத்தேதான் செல்லும். குழந்தை, பால் குடிக்க அம்மாவினிடத்தில் தான் செல்லும். அது போல, ஆச்சாரியனாகிய ஞானத்தாய் அடிக்கிற போது, குருநாதரைத் தவிர வேறு எங்கு போவான்?

மூன்றாவது நாள் பசி தாங்க முடியவில்லை. அப்பொழுது ''வேறு எதையும் சாப்பிடாதே என்றால் ஆகாரத்தைத்தானே குறிக்கும்'' என நினைத்தான். அங்கே இருந்த எருக்கஞ்செடியை ஒடித்து ஒடித்து வந்த பாலைக் குடித்தான். மிகவும் அதிகமான உஷ்ணத்தால் உடனே பொங்கி, கண்கள் குருடாகிவிட்டன. அப்பொழுதும், ஆச்சாரியரை மறக்கவில்லை. இரவு வந்து விட்டது. வழி தெரியவில்லை. அப்படியே தடுமாறிக் கொண்டு வந்து, படித்துறை இல்லாத பாழ் கிணற்றிலே விழுந்து விட்டான். விழும் போதும் ''குருநாதா!'' என்று விழுந்தான். அந்த அபாயத்திலும் ஆச்சாரியனை நினைக்கிறான். அந்தக் கிணற்றிலே முளைத்திருந்த ஒரு செடி உயிர் தந்தது. அப்பொழுதும் ''குருநாதா! குருநாதா!! குருநாதா!!! என்றான். நினைத்துப் பாருங்கள், ''பட்டினியாய் இருக்கும் போது நாம் சொல்லுவோமா?'' என்று.

இரவு 8 மணி. குருநாதர் பாடம் சொல்கிற போது உபமன்யுவைக் காணோம். அவர் கருணைக் கடல். கிருபாநிதி. ''உபமன்யு எங்கே?'' என்றார். ''சுவாமி! அவன் மூன்று நாளாக மிகவும் வாடி விட்டான். காலையில் போனவன் இன்னும் வரவில்லை'' என்றான் வேறொரு மாணவன்.

தீவட்டி எடுத்துக் கொண்டு போனார். "உபமன்யூ! கண்ணா! உபமன்யூ!! என்றார், "சுவாமி! அடியேன் கிணற்றிலே இருக்கிறேன்" என்றான். "ஏனப்பா!" என்றார். "எருக்கம் பால் குடித்துக் கண்கள் குருடாகி விட்டன, குருநாதா! என்னைக் காப்பாற்றும்" என்றான்.

உடனே, தேவர்கள் நோயைப் போக்குகின்ற தேவ வைத்தியர்களான அசுவினி தேவர்களை வரவழைக்கும் மந்திரத்தைச் சொல்லிக் கொடுத்தார். "அதை ஜெபம் செய்; கண்களுக்கு ஒளி வந்துவிடும்." கண்ணொளி வேண்டி அந்த மந்திரத்தைச் செபித்தான் சிறுவன். அசுவினி தேவர்கள் வந்தார்கள். "அப்பா! கண்ணொளி வேண்டுமா?" என்றார்கள். "நான் படிக்கிற பையன்; கண்களுக்கு ஒளி வேண்டும்" என்றான். "அப்படியானால், தங்கப் பிளேட்டிலே உள்ள பால்கோவா, பாதாம்கீர், மைசூர்பாகு ஆகிய இவைகளையெல்லாம் சாப்பிடு; ஆச்சார்யன் உத்திரவு" என்றனர். "பத்திரிகை நிருபர் கிடையாது; ஒருவருக்கும் தெரியாது; நீ சும்மா சாப்பிடு" என்றனர். "இல்லை; எனக்கு மனச்சாட்சி இருக்கிறது; நான் சாப்பிடமாட்டேன்" என்றான். "அப்படியானால் உனக்குக் கண்ணொளி வராது" என்றான். "கண்ணொளி வராது போனால் போகட்டும்; போ" என்றான் உபமன்யு. உடனே அவனது குருபக்தியைப் பாராட்டி, தேவலோகத்துச் சோமநதியின் தீர்த்தம் கொண்டு வந்து, கண்ணிலே ஊற்றினார்கள். பொன் போன்ற கண்ணும் ஒளியும் கிடைத்தது.

பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்னே நடந்த வரலாறுகளை நினைத்தால், அந்தக் கண்ணுக்கு அவையெல்லாம் தெரியும். சினிமாப்படம் பார்க்கிற மாதிரி. பத்தாயிரம் ஆண்டுகட்கு அப்பால் நடக்கும் வரலாறுகளை நினைத்தால், அவைகளும் இவர் கண்களுக்கு நன்றாகத் தெரியும். அந்தக் கண் கொண்டுதான் உபமன்யு முனிவர் பெரியபுராணம் சொன்னார். சுந்தரர் என்று சொன்னால், சுந்தரர் கண்ணுக்குத் தெரியும். திருநாளைப்போவார் என்று சொன்னால், அவர்

நிறம் தெரியும்; அவர் வடிவம் தெரியும். அத்தகைய மகிமையுள்ள கண்களைக் கொடுத்தனர் அசுவினி தேவர்கள்.

இந்த அழகிய கண்களைப் பெற்று, இந்தக் குழந்தை ஓடிவந்து, குருநாதரின் கால்களில் விழுந்தான். "குருநாதா! எனக்குக் கண்ணொளி கிடைத்து விட்டது!" "உனக்குச் சாதாரண கண்கள் அல்ல; மகனே! முக்காலங்களிலும் நடக்கும் நிகழ்ச்சிகள் உன் கண்களுக்குத் தெரியும். இந்தக் கண்களைக் கொண்டு, சில அடியார்களின் வரலாற்றை நீ சொல்" என்று சொன்னார். அவர் கைலாயமலைச் சாரலில் இருந்து அடியார்கள் வரலாற்றைச் சொல்லிக் கொண்டிருந்தார் என்பது வரலாறு. உபமன்யு அத்தனை பெரியவர் ஆனதற்கு என்ன காரணம்? குருபக்தி; மறந்து விடாமல் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆச்சார்ய பக்தியைக் காட்டிலும் சிறந்தது வேறொன்றும் கிடையாது. குருபக்தியினால் உயர்ந்தவர்கள் நம் நாட்டில் எத்தனையோ பேர் இருந்தார்கள்.

திருவண்ணாமலையிலே குகை நமசிவாயர் என்று மகான் ஒருவர் எழுநூறு ஆண்டுகட்கு முன்னே இருந்தார். அவர் குகையிலே உட்கார்ந்து 'நமசிவாயம், நமசிவாயம்' என்று சொன்னதால் அவர் குகை நமசிவாயர் என்று பெயர் பெற்றார். அவருக்கு ஒரு சீடர் இருந்தார். அவரும் 'குருநமசிவாயர், குருநமசிவாயர்' என்று சொல்லிக் கொண்டு இருந்தார். அதனாலே அவர் குருநமசிவாயர் எனப்பட்டார்.

குகை நமசிவாயர் ஒரு நாள் வாந்தி எடுத்தார். குருநமசிவாயர் உடனே ஒரு பாத்திரத்தில் பிடித்தார். "ஏன்டா?" என்றார். "குருநாதர் வாந்தி கால் படுகிற இடத்திலே விழக் கூடாது" என்றார். கொஞ்ச நேரம் கழித்துப் பாத்திரத்தைக் கழுவி வைத்தார். "என்ன செய்தாய்?" என்றார். "கால்படாத இடத்திலே கொட்டி விட்டேன்" என்றார். "எங்கே?" என்றார். "நான் அதைக் குடித்துவிட்டேன்" என்று சொன்னார். குருநாதர் வாந்தி உங்கட்கு வாந்தியாகத் தெரியும். அவருக்கு அமிர்தமாகத் தெரியும். குழந்தை வாயிலே இருக்கிற ஒரு சிறிய மிட்டாய்

நம் வாயிலே வைத்தால் எச்சிலாகவா தெரியும்? அதனால்தான் கண்ணப்ப நாயனார் கடித்துக் கொடுத்த மாமிசத் துண்டைச் சிவபெருமான் தேவாமிர்தமாக உண்டார். ''பக்தி என்ன செய்யாது?'' என்கிறார் ஆதிசங்கரர். வேடன் பக்த சிரோன்மணியாகி விட்டான்; காரணம், பக்தி; சபரி கொடுத்த எச்சில் கனி இராமனுக்குத் திவ்யமான பழமாய் இருந்தது. அன்பு அதிகமாய் இருந்தால், என்ன தெரியாது? எச்சில் தெரியாது. ஆதலால், அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலுக்கும் அப்பால் இருப்பவனுக்கு இப்பால் தேவைப்படாது.

அந்தப் பெரிய நிலையிலே குருநாதர் வாந்தியை சாப்பிட்டார் குரு நமசிவாயர். உத்தமமான பக்தி.

ஒரு நாள் ஆச்சாரியனிடம் விசிறிக் கொண்டு இருந்தார். அந்தக் காலத்தில் மின்சாரம் கிடையாது. Fan கிடையாது. விசிறியைக் கீழே போட்டுவிட்டு, கையைத் தேய்த்தார் குருநாதர் ''தம்பீ! என்னடா?'' என்றார். இரவு பதினொரு மணி இருக்கும். சிதம்பரத்திலே நடராஜருடைய சபையிலே சிதம்பர ரகசியம் ஒன்று உண்டு. வில்வ மாலை போட்டு, அங்கே பட்டுத்திரை மூடியிருக்கும். அது தீப்பிடித்து விட்டது. அதை இங்கிருந்தே, அதாவது திருவண்ணாமலையிலிருந்தே அணைக்கிறார்.

ஒரு நாள் அகாரணமாகச் சிரித்தார். சிரிக்கிற தன்மை மனிதனுக்கே உண்டு. ஆடு, மாடுகள் சிரிக்காது. பசு மாட்டைக் கண்டு காளை மாடு சிரிக்குமா? மனைவியை கண்டு கணவன் சிரிக்காமல் இருப்பானோ? நிச்சயமாய் இருக்க முடியாது. ஆகவே, சிரிக்கிறது ஒரு கலை. ஆனால் எப்பொழுதும் ஒரு காரணமாய்ச் சிரிக்க வேண்டும். இந்த பையன் அகாரணமாகச் சிரித்தான். ''ஏண்டா சிரிக்கிறாய்?'' என்றார் குருநாதர். திருவாரூரிலே தியாகராசர் தேரிலே போனார்; இளம்பெண் ஒருத்தி நடனம் ஆடினாள்; வழுக்கி விழுந்து விட்டாள்; அங்கே இருக்கிறவர்கள் எல்லாம் சிரித்தார்கள்; நானும் சிரித்தேன்'' என்றான், டெலிவிஷன் மாதிரி. ''நீ என்னைவிட பெரிய ஞானி ஆகிவிட்டாய்; இனிமேல் நீ

இங்கே இருக்கக்கூடாது.'' என்றார். ஏன்? இரண்டு வாட்கள் ஒரு உறையில் இருக்கக் கூடாது. இரண்டு யானைகள் ஒரு கட்டுத் தறியில் கட்டக் கூடாது. தன்னை விடச் சிறந்த அன்பர் வருவாரானால், ஆச்சாரியர் தன் உடம்பை மறைத்துக் கொள்வார்.

நான் இங்கு வந்தவுடனே கேட்டேன் நிர்மலானந்தரை ''ஆஸ்ரமம் எப்படி இருக்கிறது? சுவாமி இருந்த மாதிரி இருக்கிறதா?'' என்று. ''அதை விட பெரியதாக இருக்கிறது; வந்து பார்த்தால் அடையாளமே தெரியாது; குருநாதர் இருந்த போது இருந்ததை விட நான்கு ஐந்து மடங்கு வளர்ந்துவிட்டது.'' அதைக் கேட்டு மிகவும் மகிழ்ந்து, ''ஒரு நாளைக்கு எவ்வளவு செலவாகிறது?'' என்றேன். ''ஒரு ஆயிரம் ரூபாய்; ஒரு மாதத்திற்கு முப்பதாயிரம் செலவாகிறது; ஏதோ வந்து கொண்டே இருக்கிறது; செலவு ஆகிக்கொண்டே இருக்கிறது'' என்றார். முன்பு இங்கு நான் வந்த போது சுவாமி சிவானந்தா அவர்கள் ஒரு நாளைக்கு முந்நூறு ரூபாய் செலவாகிறது; அவர் சிவானந்தா; இவர் சிதானந்தா; சித் என்றால் ஞானம்; ஞானமே ஒரு ஆனந்தம்; ஞானத்திலே தான் ஒரு ஆனந்தம் உண்டாகும்; அஞ்ஞானத்திலே என்ன உண்டாகும்? துன்பம் உண்டாகும். ஒரு சிறிய உதாரணம் சொல்கிறேன்.

இந்த ஞானம் இருக்குமானால் துன்பத்தை இன்பமாய் எண்ணிக் கொள்வார்கள். விட்டில் பூச்சி ஒரு உதாரணம். விளக்கைத் துன்பம் என்று எண்ணாதபடி விழுந்து சாகிறது. எத்தனையோ பேர் அறுபது வயதாகியும் இரண்டாம் தாரம் செய்து கொள்கிறார்கள். இவருக்கு அறுபது; அந்த அம்மாவுக்கு இருபது. அந்த அம்மாவை இவர் கரும்பா எண்ணுவார். இவ்வளவும் அஞ்ஞானத்தாலே வருகிறது. ஞானம் இருக்குமானால், அப்படி வராது. ''சட்டி சுட்டது; கைவிட்டது'' என்று இருப்பார்கள்.

சில பேர் ஆமையைத் தின்பார்கள். இலண்டனிலே ஆமை ஒரு கப் (Cup) சூப் ஒரு பவுன். கோழியைக் கத்தி எடுத்து வெட்டுவார்கள். ஆனால், ஆமையை வெட்ட முடியாது.

ஆமைக்கு வேகம் குறைவு. அதற்காகப் பகவான் ஓடு கொடுத்தார், தற்காப்பாக. கடவுள், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றை நன்கொடையாகக் கொடுத்திருக்கிறார். தாய்மார்களுக்கு என்ன கொடுத்தார்? அழகு; ஆண்களுக்கு வீரம்; நரிக்குத் தந்திரம்; கடவுள் கொடுத்த அருட்கொடை; குதிரைக்கு வேகம்; மாட்டுக்கு உழைப்பு; மயிலுக்குத் தோகை; சிம்மத்துக்கு ஆற்றல்; யானைக்குத் தந்தம்; சேவலுக்குக் கொண்டை.

அந்த ஓடு இல்லையென்றால், ஆமை விரைவில் செத்துப் போகும். ஓடு இருப்பதினாலே ஆமையைக் கொல்ல முடியாது. ஓடு அவ்வளவு மொத்தமானது(Thickness). ஐந்து பேர் ஒன்று சேர்ந்தார்கள். மாரன், தீரன், வீரன், சூரன், கோரன் ஆகிய ஐந்து பேரும் சேர்ந்து, மூன்று கல் எடுத்து, அடுப்பு மாதிரி வைத்தார்கள். வெல்லம் காய்ச்சுகிற இரும்பு கொப்பரை வைத்து, இருபது குடம் தீர்த்தத்தை வார்த்து, ஆமையை அந்தத் தண்ணீரிலே தூக்கிப் போட்டு, மேலே ஒரு பித்தளை தாம்பாளத்தை மூடி, துள்ளிக் குதித்து ஓடாவண்ணம்; நான்கு எடை சவுக்குக் கட்டையை வைத்து தீ வைத்தார்கள். ஆரம்பத்தில் தண்ணீர் குளிர்ச்சியாகத்தான் இருக்கும். இனிமேல் தான் கட்டை தீப்பிடித்துத் தளதள என்று தண்ணீர் கொதித்து, ஆமை செத்துப் போகும். இப்பொழுது தண்ணீர் ஜில் என்று இருப்பதால், ஆமை நீந்தி விளையாடும். ஆனால், இன்னும் அரைமணி கழித்துத் தானே தண்ணீர் கொதிக்க ஆரம்பிக்கும். இது கதை அல்ல. ☺

வாதம், பித்தம், சிலேத்மம் என்பனதான் அந்த அடுப்பு மாதிரியான மூன்று கற்கள்; இந்தத் தேகந்தான் இரும்புக் கொப்பரை; ஆசைதான் அந்த நீர்; அந்த ஐந்து பேர் தான் ஊறு, சுவை, ஒளி, ஓசை, நாற்றம் என்பன; ஆத்மா என்கிற ஆமையைப் போட்டுப் பந்தபாசம் என்னும் தாம்பாளம் இட்டு, தீவினை என்ற அக்கினியை மூட்டி விட்டு இருக்கிறார்கள். இந்த ஆமையாகிய நாமெல்லாம் "அந்த ஓட்டலிலே பூரி, மசால் நன்றாக இருக்கிறது; இந்த ஓட்டலிலே இரசம், வடை எல்லாம் நன்றாக இருக்கிறது" என்று நீந்தி விளையாடிக்

கொண்டிருக்கிறோம். இது யார் சொன்னது? அப்பர் பெருமான் சொல்கிறார்.

"வளைத்து நின்று ஐவர் கள்வர்". "ஐவர்" என்பது ஊறு, சுவை, ஒளி, ஓசை, நாற்றம் என்பன; 'வளைத்து' என்றால் கேரோ செய்வது; "மனத்திடை துயரஞ் செய்து தளைத்து வைத்து" - மனிதனை எங்கேயும் போகவிடாது; "ரிஷிகேசம் போய் இருக்கிறீர்களா?" "போகணும் சார்; பையன் படித்துக் கொண்டு இருக்கிறான்; அதற்குப் பின் தான் போகணும்." வேலை கிடைத்து விட்டது. "பையனுக்கு வேலை கிடைத்து விட்டதா சார்?" "ஆமாங்க; சம்பளம் 500 ரூபாய்." " அப்படியா! ரிஷிகேசத்திற்குப் போகிறதுதானே." "இல்லை சார்; பையனுக்கு ஒரு முடிச்சு போட்டு விட்டால் பரவாயில்லை" திருமணம் ஆகிய பிறகு கேட்டால், "மருமகள் வயிற்றிலே ஒரு பூ பூத்து விட்டால், அதைப் பார்த்து விட்டுப் போய் விடலாம்" என்றான். இந்த ஜென்மத்திலே போகமாட்டார்கள். பந்த பாசம். "தளைத்து வைத்து உலையில் ஏற்றி, தழல் எரி மடுத்த நீரில், திளைத்து நின்று ஆடுகின்ற ஆமை போல் தெளிவிலாதேன், இளைத்து நின்று ஆடுகின்றேன் என் செய்வேன் தோன்றினேனே." குழந்தைக்குச் சொல்வதைப் போலச் சொல்கிறார் அப்பர்; இல்லையா? அது ஒன்று தான் Upper வாக்கு; மற்றெல்லாம் Lower வாக்கு.

*" வளைத்து நின்(று) ஐவர் கள்வர்*
*மனத்திடை துயரஞ் செய்து*
*தளைத்து வைத் (து) உலையில் ஏற்றி*
*தழல்எரி மடுத்த நீரில்*
*திளைத்து நின் (று) ஆடுகின்ற*
*ஆமைபோல் தெளிவி லாதேன்*
*இளைத்து நின் (று) ஆடுகின்றேன் :*
*என் செய்வேன் தோன்றி னேனே."*

- அப்பர் தேவாரம்

ஏன் இந்த ஆமை துன்பப்பட்டது? துன்பத்தை இன்பமாய்

எண்ணியது; அஞ்ஞானம். ஞானம் இருந்தால், என்ன வந்தாலும் மகிழ்ச்சியாகவே இருக்கும்.

மகேந்திரவர்மனின் ஆட்கள் வந்து, அப்பரை அழைக்கிறார்கள். சுவாமிகள்

*"நாமார்க்கும் குடியல்லோம்; நமனை யஞ்சோம்;*
*நரகத்தில் இடர்ப்படோம்; நடலை யல்லோம்;*
*ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோம் அல்லோம்;*
*இன்பமே எந்நாளும்; துன்பமில்லை"*

என்று எண்பத்தொன்றாவது வயதில் கர்ஜிக்கிறார். ஆகவே, ஞானிகள் எப்பொழுதும் சந்தோஷமாகவே இருப்பார்கள்.

நான் டெல்லிக்கு வந்ததும் செய்தித்தாளைப் பார்த்தேன். "ஒரு பெரிய மில் அதிபர் ஜூலை 17ம் நாள் இறந்து விட்டார்" என்ற செய்தி இருந்தது. அவருக்கு இருபத்திரண்டு மில்கள் உள்ளன. சொத்து ரூபாய் பத்து கோடி சேரும். எத்தனை கோடி இருந்தும் என்ன பயன்? கூடவருமா? அந்த மில்கள் தான் வருமா? அந்தப் பங்களா வருமா? இரண்டாந்தாரம் திருமணம் செய்துகொண்ட அந்த அம்மா வருவாங்களா? ஒன்றும் ஆவி கூட வராது. ஆனால் ஒன்றே ஒன்று வரும்; எது? ஞானம் வரும்.

சில குழந்தைகள் ஞானியாக இருக்கிறார்கள். என்ன காரணம்? போன பிறவியிலே ஞானியாக இருந்து, சில சங்கல்பத்தாலே வந்து பிறந்து இருக்கிறார்கள். எல்லாம் நின்று போகும். ஞானம் மட்டும் கூட வரும்.

*"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற் (கு)*
*எழுமையும் ஏமாப் (பு) உடைத்து."*

என்பது குறள். 'எழுமையும்' என்றால், "ஏழு பிறவி யிலும்" என்று பொருள் இல்லை; "பிறவி எழும் போதும்" என்பது பொருள். ஞானம் ஒன்றுதான் கூடவே வரும்.

இது மலர்; இந்த மலரிலே மணம் இருக்கிறது. மலர் வேறு; மணம் வேறு இல்லையே. எங்கே போனாலும், மணம்

கூடப் போகும் மலருடன், நான் எங்காவது போனால், இந்த உத்திராட்சம் நின்று போகும். அறிவு? கூட வரும். ஆன்மா வேறு; அறிவு வேறு இல்லை. அறிவும் ஆன்மாவும் ஒன்று ஆனால், சரீரம் வேறு; ஆன்மா, வேறு காரில் ஏறிக் கொண்டு போகிற மாதிரி இந்த உடம்பில், உயிர் ஏறிக் கொண்டு போகிறது. சில சமயத்தில் கார் நின்று போனால், ஆள் இறங்கிப் போகிறான். எத்தனையோ வாகனம். மாட்டு வண்டி வாகனம், குதிரை வண்டி வாகனம். இது மாதிரி ஆட்டு உடம்பு, மாட்டு உடம்பு, நாய் உடம்பு, நரி உடம்பு. எத்தனையோ உடம்பு மாறி மாறி வருகிறது. ஆகவே, உடம்பு வேறு; ஆத்மா வேறு. அருணகிரிநாதர் பாடுகிறார்.

*"அனித்தமான ஊன்நாளும் இருப்பதாக வேநாசி*
*அடைத்து, வாயு ஓடாத வகைசாதித் (து)*
*அவத்திலேகு வால்மூலி புசித்துவாடும் ஆயாச*
*அசட்டுயோகி யாகாமல், மலமாயை*
*செனித்ததாரி யோபாதி ஒழித்து, ஞானஆசார*
*சிரத்தையாகி, யான்வே (று) என் உடல்வேறு."*

இந்தச் சரீரம் வேறு; ஆத்மா வேறு என்று அருணகிரி நாதர் சொல்கிறார்.

ஒரு ஆள் கொஞ்ச நாள் ஊரைச் சுற்றி விட்டு வீட்டுக்கு வந்தான். மனைவியைப் பார்த்து, "பார்வதி! நான் இளைத்து விட்டேனா? பார்" என்றான். இவர் இளைத்தாரா? இவர் உடம்பு இளைத்ததா? முட்டை வேறு; முட்டைக்குள்ளே இருக்கின்ற கோழி வேறு.

*"குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே*
*உடம்பொ(டு) உயிரிடை நட்பு."* - குறள்

முட்டையை விட்டு குஞ்சு வெளியே வருகிறது. முட்டை வேறு; குஞ்சு வேறு. அது முட்டை; இது கட்டை

இங்கே நான் சட்டை போட்டு இருக்கிறேன். ஆணி மாட்டி சட்டையின் பின்பக்கம் கிழிந்து இருக்கிறது. ஒரு நண்பரைப் பார்த்தேன்; "சார்! என் சட்டை கிழிந்து

இருக்கிறதா? பாருங்கள்'' என்று தான் சொல்லவேணும். ''நான் கிழிந்திருக்கிறேனா?'' என்று கேட்கலாமா? ஆத்மா வேறு; உடல் வேறு.

டிரைவர்கள் எல்லாம் இரவு பதினொரு மணிக்கு ஷெட்டிலே (Shed) ஒன்றாகச் சேர்வார்கள். அரசாங்க பஸ் முப்பது, நாற்பது இருக்கும். ''கிட்டு! நீ ஏண்டா லேட்டாக வந்தாய்? '' ''ரிஷிகேசத்துக்கு மூன்று மைலிலே எனக்கு ஒரு நட் (Nut) கழன்று விட்டது,'' நட்டு இவனுக்கா? இவன் வண்டிக்கா? ''இராமு! நீ ஏண்டா லேட்? '' ''ஹரித்துவாரத்திற்கு ஐந்து மைலிலே எனக்குப் பஞ்சர் ஆய்விட்டது'' இவனுக்கா பஞ்சர்? இவன் ஓட்டுகிற பஸ்ஸுக்கா?

பஸ்ஸை அவன் செலுத்துகிறான். உடலை உயிர் செலுத்துகிறது. உயிரை இறைவன் செலுத்துகிறான். டயருக்குள்ளே டியூப்; டியூபுக்குள்ளே காற்று: இப்படிச் சொல்லியும் விளங்கவில்லை என்றால், எந்த ஜன்மத்துக்கும் விளங்காது. டயர் போல உடம்பு; டியூபு போல உயிர்; காற்று போல சிவம். இன்னொரு உதாரணம்:

காரைச் செலுத்துவது டிரைவர்; டிரைவரை யார் செலுத்துவது? நாம் ''சிவானந்த நகருக்கு விடு''; ''தபால் ஆபிசுக்கு விடு'' என்கிறோம். காரை முன் சீட்டிலே இருந்து டிரைவர் செலுத்துகிறான்; பின் சீட்டிலே இருந்து டிரைவரை நாம் செலுத்துகிறோம். கார் உடம்பு; டிரைவர் உயிர்; நாம் தான் சிவம். எனவே, உடல் வேறு; ஆத்மா வேறு.

இங்கிருந்து தென்னாற்காட்டிற்குச் செல்ல வேண்டும். சென்னைக்கு வந்து விட்டோம். கார் போய்க் கொண்டே இருக்கிறது. எதிரிலே ஒரு ஆள் வந்தான்.''செங்கல்பட்டு வந்து விட்டதா?'' ''செங்கல்பட்டு போய்விட்டது; விழுப்புரம் வருகிறது'' என்றான். விழுப்புரம் வரவுமில்லை; செங்கற்பட்டு போகவுமில்லை. ஆனால் இப்படித்தான் பலபேர் பேசுகிறார்கள். உங்களைத் தவிர. ''செங்கல்பட்டுக்கு நாம் வந்து விட்டோமா?'' என்று கேட்க வேண்டும். அது போல, இந்த உடம்பே நாமென்று எண்ணி விடக்கூடாது. உடம்பு வேறு; ஆத்மா வேறு.

முந்நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னே திருச்சிராப் பள்ளியில் தாயுமானவர் என்ற ஒரு பெரியவர் இருந்தார். வடமொழியும், தென்மொழியும் கரை கண்டவர். அவருக்குக் குருநாதர் ஒருவர் இருந்தார். திருமூலர் மரபிலே வந்தவர். அவர் தாயுமானவருக்குச் சொன்னார் :

"பாராதி ஐம்பூதம் நீயல்லை:
பார் இந்திரியம் கரணம் நீயல்லை:
ஆராயும் அறிவு நீ யென்னான்"

"மகனே! பிருதிவி. அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்கள் நீயல்லை; மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற பஞ்சேந்திரியங்கள் நீயல்லை; வாக்கு, பாணி, பாதம், வாயு உபத்தம் என்ற கன்மேந்திரியங்கள் நீயல்லை; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நீயல்லை" என்றார். அப்படியானால் "நான் யார் சுவாமி?" "ஆராயும் அறிவு நீ" என்றார். ஆகவே, இந்த உடம்பை வளர்ப்பதோடு கூட இந்த அறிவையும் வளர்க்க வேண்டும்.

உடம்பை வளர்க்கிறவர் டாக்டர்; அறிவை வளர்க்கிறவர் குருநாதர். டாக்டரிடம் போனால் டானிக் தருவார்; குருநாதரிடம் போனால் அறிவைக் கொடுப்பார்; ஞானத்தைக் கொடுப்பவர் ஆச்சாரியர் ஒருவரைத் தவிர, வேறு யாருமில்லை. இதை மனதிலே நன்றாகப் பதிய வைக்க வேண்டும். ஆச்சாரியர் தன் பார்வையினாலேயே ஞானத்தைக் கொடுப்பார்; வாக்கினாலேயே வாழ வைப்பார்; "நீ சௌக்கியமாக இரு" என்றால் போதும்; வேறு ஒன்றும் தேவையில்லை.

ஆகவே, நம் வாழ்க்கையிலே சிறந்த ஞான ஆச்சாரி யனைப் பெற்றுவிட்டால், நிச்சயம் பிறவிக்கடலைத் தாண்டிவிடலாம்.

அருணகிரிநாதர் பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்தார்கள்; முருகப் பெருமானே ஞானகுருவாக வந்தார். என்ன சொன்னார்:

*''ஒருபூத ரும்அறி யாத்தனி வீட்டில் உரை, உணர்வற்(று)*
*இரு பூத வீட்டில் இராமல்'' என்றார்.*

சுவாமி சிவானந்தர் பல பேர்களுக்கு அனுக்கிரகம் செய்தார். ஆனால் தீட்சை சில பேருக்குத்தான் செய்தார். அது போல, முருகன் பல பேர்களுக்கு அனுக்கிரகம் பண்ணினார். தன் திருவாய் மலர்ந்து பிரணவ ஞான மந்திரத்தை மூன்று பேர்களுக்கு மட்டுந்தான் உபதேசம் செய்தார். 1. சிவபெருமான் 2. அகத்தியர் 3. அருணகிரிநாதர் ஆகியவர்களே அம்மூவர் ஆவர். இது எனக்கு எப்படித் தெரியும்? ஒரு மகான் சொன்னார்.

குறுமுனியாய் இருக்கும் அகத்தியர், சிவம் என்று சொன்னால் சந்தேகம் வரும். 'எந்த சிவம்?' என்று விளக்கமாகச் சொல்ல வேண்டும். நஞ்சுண்டு வாழ்ந்த பரமேஸ்வரருக்கும், குறுமுனிவரான அகத்தியருக்கும், அருணகிரிநாதருக்கும் உபதேசித்த என் ஆண்டவரே! முருகப் பெருமானே! குருவாக வந்து அருணகிரிநாதருக்கு ''இந்த உடம்பிலே இருந்து கொண்டே, நீ வேறு - உடம்பு வேறு ஆக வேணும்'' என்று சொன்னார். உடம்பு இருக்கும்; உடம்புக்கும் தனக்கும் தொடக்கு இருக்காது.

இரமணமகரிஷி நோயினால் சிரமப்பட்டார். டாக்டர் வந்து பார்த்தார். ''குளோரபாம் கொடுத்து, ஆபரேஷன் செய்கிறேன்'' என்று சொன்னார். ''ஒன்றும் வேண்டாம்; அப்படியே வெட்டு'' என்றார் சுவாமி. சரீரம் வேறு, தான் வேறு என்று இருந்ததால், சரீரத்தைச் சேதிக்கிற போது அந்த வேதனை தோன்றாது.

சதாசிவ பிரமேந்திராள் என்பவர் மிகப்பெரியவர். அவருக்குச் சிறிய வயதிலேயே கல்யாணம் ஆயிற்று. கல்யாணமாகிய பின் மணமகள் தாய் வீட்டில் வளர்கிறாள். ஆனால், சதாசிவ பிரமேந்திராள் தர்க்கம், மீமாம்சம் முதலியவைகளையெல்லாம் படித்துக் கரை கண்டு விட்டார். அவருக்கு வயது இருபத்தேழு ஆனது, அந்தப் பெண் பருவ மங்கை ஆனாள். சம்பந்திகள், மற்றவர்கள் எல்லோரும்

வந்தார்கள், வடை, பாயசத்தோடு ஊரில் இருப்பவர்க்கெல்லாம் சாப்பாடு.

"மாமனார் வந்திருக்கிறார்; மாமியார் வந்திருக்கிறாள்; மைத்துனர் வந்திருக்கிறார்; நீ ஆனந்த தாண்டவம் புரிய வேண்டாமா? பசி தெரியுமா?" என்று கேட்டாள் தாய். சதாசிவம் அதற்கு "மங்கை பருவம் அடைந்த தகவல் வந்த இன்றைக்கே இரண்டு மணிக்குக் கூட சோறு கிடைக்கவில்லை; அவளே வந்தாள் என்ன ஆகும்?" என்று வேஷ்டி எடுத்து விட்டுக் கிளம்பிவிட்டார். எப்படி ஞானம் வரும்? தீக்குச்சியிலே உறைத்த உடனே நெருப்பு வரும். சில பேர் மனைவி திட்டினாலும் போவதில்லை. இது சம்சார சாகரம்.

அவர் ஒரு குருநாதரைப் போய் வணங்கினார். வந்தவர்களிடத்தில் எல்லாம் தர்க்கம், மீமாம்சம் ஆகியவைகள் எல்லாம் போட்டு உருட்டுவார். அந்தக் காலத்தில் தர்க்கம், மீமாம்சம் எல்லாம் நிறைய பேர்கள் படிப்பார்கள்.

மீமாம்சம் என்னும் நூல் ஒவ்வொன்றுக்கும் காரண, காரியங்களைக் கூறும் நூல். ஓசை என்று ஒன்று இருக்கிறது. ஓசை வருவதற்கு என்ன காரணம்? இரண்டு காரணங்கள். ஒன்றோடு ஒன்று சேர்ந்தால் ஓசை வரும்; ஒன்று இரண்டாகப் பிளந்தால் ஓசை வரும். இரண்டு பேரும் ஒன்று சேர்ந்தால் கல்யாண மேளம். சேர்ந்தவர்கள் பிரிந்தால் அங்கும் மேளம் வரும். ஒன்று சாவு: மற்றொன்று வாழ்வு. இதைப் போட்டு உருட்டுவார் சதாசிவம். வருகிறவர்களுக்கு அது தெரியுமா?

"குரு மகராஜ்! தங்களிடத்தில் ஏதாவது ஞானம் கேட்கலாம் என்று வந்தோம்; ஆனால், இதைப் போட்டு உருட்டுகிறார் சதாசிவ பிரமேந்திராள்" என்றார்கள். குருநாதர் 'சதாசிவம்! வாய் மூடு" என்றார். அன்றைக்கு வாய் மூடியவர் தான், ஒரே மௌனம்.

சரீரத்துக்கு மேல் ஒன்றும் கிடையாது. திகம்பரமாய்ப் போகிறார். முஸ்லீம் இராஜா அரண்மனை வழியே

போகிறார். ''யாரோ ஒருவன் நிர்வாணமாகத் தெருவில் போகிறான்'' என்று சொல்ல, அரசன் ''அவனை வெட்டி விடு'' என்றான். சேவகன் வாளை வீசினான்; தோளில் பட்டது; கை துண்டாகி விழுந்தது. முகம் சற்றும் சுளிக்கவில்லை; வாடவில்லை; அழவில்லை; காரணம்: தேகாத்ம புத்தியில்லை. மலர்ந்த முகத்துடன் அவர் போய்க்கொண்டே இருந்தார்.

அனேகம் பேர் அங்கே ஜபம் பண்ணிக்கொண்டு இருக்கிறார்கள். கொசு கடிக்கிறது. உடனே கொசுவுக்கு மோட்சம். கொசுக்கடிக்கே நம்மால் தாங்க முடிவதில்லை. ஆனால், கை அறுபட்டு விழுந்தபோதும்கூட, முகத்திலே சுளித்தலின்றி முகமலர்ச்சியோடு போவதைப் பார்த்தார் இராஜா. பெரிய ஞானி என்று தெரிந்து கொண்டார் வந்து காலிலே விழுந்து, ''நான் தெரியாமல் தப்பு செய்து விட்டேன்.'' ''என்ன தப்பு செய்தாய்?'' ''கையை வெட்டி விட்டேன்.'' ''யார் கையை?'' ''உங்கள் கையை.'' அப்பொழுது தான் பார்த்தார் தன் கையை. எவ்வளவு பெரிய நிலை! தன் கையை வெட்டினது கூட அவருக்குத் தெரியவில்லை. சரீரம் வேறு; தான் வேறு இதைத் தான் சொன்னார். முருகன் அருணகிரிநாதருக்கு; ''இந்த உடம்பிலே இருந்துகொண்டே இந்த உடம்பை விட்டு விலகி விடு''.

இந்த உடம்பாய் இருக்கும் வீட்டிலே நாம் குடியிருக்கிறோம். நம்கூட 96 பேர்கள் ஒட்டுக் குடியாய் இருக்கிறார்கள். ஒரு அறையிலே தனியே படுத்துக் கொள்வதற்கும். 25 பேர்கள் சேர்ந்து படுத்துக் கொள்வதற்கும் வித்தியாசம் உண்டு. ஒருவன் காலைப் போடுவான்; ஒருவன் கையைப் போடுவான்; நாம் 96 கலியுகர்களுடன் சேர்ந்து வாழ்கிறோம். ''ஒருபூதரும் அறியாத் தனி வீட்டில் உரை. உணர்வு அற்று, இரு; பூத வீட்டில் இராமல்'' என்று ஆண்டவர் முருகர் சொன்னார்.

குருவாக வந்து எம்பெருமான் அருணகிரிநாதருக்கு உபதேசம் செய்கிறார்: பின்னொரு பாட்டு:

''எட்டி ரண்டும்அறி யாத என்செவியில்
எட்டி ரண்டும்இது வாம்இ லிங்கமென
எட்டி ரண்டும் வெளியாமோ திந்தகுரு முருகோனே. . .

என்றும் பாடுகிறார்.

ஆகவே, பக்குவப்பட்ட ஆத்மாக்களுக்கு இறைவன் குருவாக வருகிறான். அந்த கடைசி நிலை தான் குருபக்தி. குருபக்தியினால் உயர்ந்தவர்கள் எண்ணிலாதவர்கள். கதிர் என்ற வார வெளியீட்டில் நான் பெரிய புராணம் தொடர்வாக எழுதிக் கொண்டு இருக்கிறேன். மூன்று நாட்களுக்கு முன் பெருமிழலைக் குறும்பர் என்பவரைப் பற்றி எழுதினேன். அவர் ஒரு குறுநில மன்னர், சுந்தரமூர்த்தி நாயனாரைக் குருவாகக் கொண்டார். அவரையே தியானம் பண்ணினார். அஷ்டமா சித்திகளும் வந்தடைந்தன. அவர் மிழலை என்ற ஊரில் தியானம் பண்ணிக்கொண்டு இருந்தாராம். அதே சமயத்தில் திருவஞ்சைக் களத்திலே சுந்தரமூர்த்தி நாயனார் இருக்கிறார். அவர் கைலாயம் போக வேண்டும் என்று எண்ணுகிறார். அங்கே சுந்தரர் எண்ணியது மிழலையிலே இருக்கிற பெருமிழலையாருக்குத் தெரிந்தது. ''நாளைக்கு குரு போகிறார்; நாம் இன்றைக்கே போகலாம்'' என முந்திப் போனார். இது பெரிய புராணம் படித்தவர்க்குத் தெரியும்.

ஆச்சாரிய பக்தியிலே சிறந்தவர் பெருமிழலைக் குறும்பர். ஆச்சாரிய பக்தியிலே உயர்ந்தவர் அப்பூதி அடிகளார். குருநாதராகிய அப்பர் சுவாமிகளையே தெய்வமாகக் கருதி உயர்ந்தவர்.

ஆகவே, சிறந்ததொரு எளிமையான் மார்க்கம் குரு பக்தி. அந்த குருபக்தி செய்வோமானால், ஆச்சாரியனுடைய கருணை நமக்குக் கிடைக்கும்; நமது வினையெல்லாம் வெந்து நீறாகும். மெய்ஞ்ஞானம் உண்டாகும்.

இந்தத் தத்துவங்கள் எல்லாம் உங்களுக்குத் தெரிந்த ஒன்று தான். என்றாலும், செய்திகளையெல்லாம் உங்களுக்கு ஞாபகப்படுத்தினேன். மகான்கள் எல்லாம் இருக்கிற இந்தப் புனித இடத்திலே நான் என்ன சொல்ல வேண்டும்?

இங்கு வந்தவுடனே எனக்கு என்ன ஞாபகம்? முன்பு வந்த போது சுவாமி சிவானந்தா அவர்கள் இரண்டு தடவைகள் வரவேற்றார்கள். இப்போது இல்லையே என்று எண்ணுகிறேன். இருந்தாலும் அதற்குச் சுவாமி சிதானந்தா அவர்கள் இருந்து அனுக்கிரகம் பண்ணுகிறார்கள். ஆகவே தான் 'குருபக்தி' என்று பேசத் தோன்றியது. அந்த பக்திக்கு அன்பு என்று பொருள். குருவினிடத்தில் அன்பு செலுத்துவதுதான் குருபக்தி. மற்றொன்று சொன்னால் உங்களுக்கு நன்கு விளங்கும்.

இறைவனை நேராக வணங்கினால் ஒரு ஓட்டு. குருவை வணங்கினால் இரண்டு ஓட்டு வரும். ஆச்சாரியன் உள்ளத்திலே இறைவன் இருக்கின்றான். ஆகையால், குருநாதரை வணங்கினால் இறைவனை வணங்கிய புண்ணியமும் வரும். தலைமைத் தபால் அலுவலகத்தில் அஞ்சல் போட்டால், பேருந்து வண்டி நிலையத் தபால் பெட்டிக்குப் போகாது. ஆனால், பேருந்து வண்டி நிலையத் தபால் பெட்டியில் போட்டால், தலைமைத் தபால் நிலையத்திற்குச் சென்றுவிடும். அது போலக் குருநாதரை வணங்கிவிட்டால் இருவகைப் பயனும் கிடைக்கிறது. குருநாதருடைய உள்ளத்திலே ஆண்டவன் இருக்கிறார். நன்றாகப் பழுத்த ஞானிகள் இறைவனை உள்ளுக்குள்ளே நேருக்கு நேராகக் காண்பர்.

ஆன்மாக்களிலே மூன்று வகை உண்டு. ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று வகை மலங்கள் உண்டு. ஆணவ மலம் மட்டும் உள்ள ஆத்மாக்களுக்கு விஞ்ஞான கலர் என்று பெயர்; ஆணவம், கன்மம் என்ற இரண்டு மலங்கள் உள்ள ஆத்மாக்களுக்குப் பிரளயா கலர் என்று பெயர்; ஆணவம், கன்மம், மாயை என்று மூன்று மலங்களும் உள்ள ஆத்மாக்களுக்குச் சகலர் என்று பெயர்.

இந்த மூன்று மலங்களைப் பற்றி ஒரு சிறு விளக்கம் கொடுக்கிறேன். அரிசி என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும்; அரிசியோடு நன்றாக ஒட்டிக் கொண்டிருப்பது தவிடு; அரிசிக்கு மேலே என்ன இருக்கிறது? முளை,

மூடியிருப்பது எது? உமி. உமி போல மாயாமலம் ; முளை போலக் கன்ம மலம்; தவிடு போல ஆணவ மலம். உமி மட்டும் எடுத்த நிலை ஒன்று; உமியும், முளையும் எடுத்த நிலை ஒன்று; உமியும், முளையும், தவிடும் எடுத்த நிலை ஒன்று.

ஒரு மலம் மட்டும் உள்ள ஆத்மாக்களுக்குப் பகவான் உள்நின்று ஜோதியாகக் காட்சி தருவார்; இரு மலம் உள்ளவர்களுக்கு முன்னிலையாகக் காட்சி தருவார்; மும்மலம் உள்ளவர்களுக்கு மானிடச் சட்டை தாங்கிப் படர்க்கையில் ஞானகுருவாக வந்து காட்சி தருவார்.

*"செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்*
*திருப்பெருந் துறையுறை கோயிலும் காட்டி,*
*அந்தணன் ஆவதும் காட்டி, வந் தாண்டாய்!*
*ஆரமு தே! பள்ளி எழுந்தரு ளாயே!!*

என்பது திருவாசகம்.

மாணிக்க வாசகருக்குத் திருப்பெருந்துறையிலே சிவபெருமான் குருநாதராக வந்து காட்சி தந்தார்.

தன்மை, முன்னிலை, படர்க்கை என இடம் மூவகைப் படும். தன்மை என்பது உள்ளுக்குள்ளே ஜோதியாகக் காண்பது.

*"உலகெ லாம்உ ணர்(ந்து) ஓதற்(கு) அரியவன்:*
*நில(வு) உ லாவிய நீர்மலி வேணியன்:*
*அலகில் சோதியந் அம்பலத் (து) ஆடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்"*

என்பது பெரிய புராணத்தின் முதற் பாட்டு.

"அலகில் சோதியன்" என்பது ஒரு மலமுடைய ஆன்மாக்களுக்குச் சோதியாக வந்து காட்சி தருவதைக் குறிக்கும்; இரண்டு மலமுடைய பிரளயா கலருக்கு மான், மழு, சந்திரசூடியாக முன்நின்று காட்சி தருவான்; மூன்று மலங்களுடைய ஆன்மாக்களுக்கு இறைவன் தோன்ற மாட்டான்; "உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்." இந்த

அடி மும்மலங்களையுடையவனுக்கு இறைவன் அரியவன் எனக் குறிக்கிறது. இருமலங்களையுடைய ஆன்மாக்களுக்கு "நிலவு உலாவிய நீர்மலி வேணியன்" ஆகக் காட்சி தருவான்; "ஒரு மலமுள்ள ஆன்மாக்களுக்கு" "அலகில் சோதியன்" ஆகக் காட்சி தருவான்.

விறகிலே தீயைப் போல இருப்பான் சகலருக்கு; பாலிலே நெய்யைப்போல இருப்பான் பிரளயா கலருக்கு; மணியிலே உள்ள ஒளியைப் போல இருப்பான் விஞ்ஞான கலருக்கு.

*"விறகில் தீயனன்; பாலில் படுநெய் போல்*
*மறைய நின்றுளன்; மாமணிச் சோதியான்"*

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியுள்ளார். இந்தப் பாவினாலே ஒருமலமுடைய ஆன்மாக்கள் சில நாளில் தங்களுக்குள்ளே ஜோதி வடிவாக ஆண்டவனைக் காண்பார்கள் என்பதை உணரலாம்.

ஆச்சாரியனை வணங்கினால், இறைவனை வணங்கிய புண்ணியம் கிடைக்கும்; அவர் இதய கமலத்தே உள்ள ஜோதியை வணங்கிய புண்ணியம் கிடைக்கும்.

ஆகவே, இந்த இடத்திலே மூன்று வகை புண்ணியம் கிடைக்கும்; சிவானந்தரை வணங்கிய புண்ணியம் கிடைக்கும்; ஆண்டவனை வணங்கிய புண்ணியம் கிடைக்கும்; சிதானந்தரை வணங்கிய புண்ணியம் கிடைக்கும்.

இங்கே மூன்று ஒட்டு என்று சிறியேன் சொல்லிக் கொண்டு, நான் விடிய விடிய பேசுவேன்; நீங்கள் எல்லாம் ஓய்வு பெற வேண்டும்; நாளை காலை நித்ய அனுஷ்டானங்களைச் செய்ய வேண்டும்.

ஆகையினாலே, நான் பேசிய பேச்சையெல்லாம் ஆண்டவன் மட்டுமா பதிவு செய்து கொள்கிறான்? இங்கேயும் பதிவாகி இருக்கிறது.

நாம் எண்ணும் எண்ணமெல்லாம் இறைவன் பதிவு செய்கிறான். நாம் ஓர் ஏழைக்கு நான்கு அணா போட்டால்,

அதுவும் அங்கு பதிவாகிறது. ஒரு நாள் ஒரு சாதுவுக்கு வாழைப்பழம் வாங்கிக் கொடுத்தால் அது ஆண்டவன் கணக்கில் பதிவாகிறது.

கதவை மூடிக்கொண்டு fan போடுவோம்; லைட் போடுவோம். முதல் தேதியானால் மின்வாரியத்திலே இருந்து '38 யூனிட் ஆகிவிட்டது; பணம் கொண்டு வா'' என்று பில் (Bill) வரும். அவன் அலுவலகத்திலே உட்கார்ந்து கொண்டு எப்படித் தெரிந்து கொள்கிறான். மீட்டர் காண்பிக்கிறது. அதுபோல, ஒவ்வொருவருக்கும் சுவாமி மீட்டர் பெட்டி வைத்திருக்கிறார். நாம் இங்கிருந்து போனவுடனே இந்த மீட்டர் பெட்டியைப் பார்க்கிறார். கோயிலில் போய் அக்கிரமம் பண்ணுவார்கள். கோயிலிலுள்ள உண்டியலில் பணம் போட வேண்டும்; ஆனால், சில பேர் உண்டியலில் இருந்தே பணம் எடுப்பார்கள். சுவாமி சொத்து என்றால் பலபேருக்கு இனிக்கும். எவன் எவன் எந்தெந்த கோயிலில் சொத்தைத் தின்றானோ அவனவன் அந்தந்தக் கோயிலிலே வௌவாலாகப் பிறப்பான்.

ஆகவே, நாம் செய்கின்ற புண்ணிய பாவங்களை எல்லாம் ஆண்டவன் அளந்து வைக்கிறான். ஆண்டவனிடத்திலே நாம் எல்லாம் பயபக்தியுடன் இருக்க வேண்டும்.

எனவே, இறைவனை வணங்குதல் வேண்டும். இறைவன் ஆச்சாரியனாக வந்து அருள் புரிகின்றான். எடுத்த இப்பிறப்பிலேயே பிறவாத நிலையைப் பெற வேணும்; கப்பலில் பிரயாணம் செய்ய மாலுமி எப்படி அவசியமோ, அப்படி ஆச்சாரியன் அவசியம். பிறவிக்கடலில் தத்தளிக்கிற நமக்கு ஆச்சாரியன் அவசியம் என்று சொல்லிக் கொள்கிறேன்.

இப்பொழுது இலாப ஸ்தானம் வந்துவிட்டது; இலாப ஸ்தானம் வந்தால் பேச்சு வராது.

இதுவரை கூறியதைச் சுருக்கிக் கூறுகிறேன்.

குருபக்தி, சிவபக்தி, அடியார்பக்தி செய்ய வேண்டும். சூரிய காந்த கண்ணாடிக்குக் கீழே வேஷ்டி வைப்பது போல்

குருபக்தி. இர்ராமகிருஷ்ணர் அப்படி கை வைத்தார்; நரேந்திரருக்கு ஞானம் வந்து விட்டது. இருபது ஆண்டுகளாகத் தேடிய பணம் வைத்திருக்கிற பெட்டியை மகனிடத்திலே கொடுக்கிற மாதிரி ஆச்சாரியன் நமக்கு ஞானத்தை ஒரு விநாடியில் தருகின்றார். ஆகவே, பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இறைவனே ஞானகுருவாக வருகின்றான். அயோததௌமியர் பாஞ்சால இராஜகுமாரன் ஆருணிக்கு அனுக்கிரகம் பண்ணினார். உபமன்யு என்ற அந்தண மாணவனுக்கு அனுக்கிரகம் பண்ணினார். குகை நமசிவாயர் வாந்தியை குருநமசிவாயர் பிரசாதமாக உண்டார். திருவாரூரிலே நடனம் ஆடினால் இங்கிருந்தே பார்க்கிறார். சிதம்பரத்திலே தீப்பிடித்தால் திருவண்ணாமலையிலிருந்தே அணைக்கிறார்; எல்லாம் குருபக்தியினால் வரும் ஞானத்தினாலே விளைகின்ற விளைவு.

குருவினிடம் பெறுவது ஞானம். எல்லாச் சாமான்களையும் கடையில் வாங்கலாம்; ஆனால், ஞானத்தை விலைக்கு வாங்க முடியாது. குருவின் அனுக்கிரகத்தால் மட்டும் பெற முடியும்.

ஆத்மாவும், ஞானமும் ஒன்று என்று தாயுமானவருக்குக் குருநாதர் சொன்னார். அந்த ஞானமே சிவமாக இருப்பதாலே அது சிவானந்தா; சித்தும் ஞானமும் ஒன்றுதான்; அது தான் சிதானந்த மகராஜ் என்ற திருப்பெயர்களோடு விளங்குகின்றார்கள்.

இமயமலை அசையாமல் இருக்கிறது; கங்கை அசைந்து கொண்டே இருக்கிறது. தண்டவாளம் அசையாமல் இருக்க வேண்டும்; இரயில் அசைய வேண்டும். தண்டவாளமும் அசைந்து, இரயிலும் அசைந்தால் எப்படி இருக்கும்? நாக்கு மட்டும் அசைந்தால் முறுக்குத் தின்னலாம்; பல்லும் அசைந்து, நாக்கும் அசைந்தால், முறுக்குத் தின்ன முடியுமா?

அப்படி அசையாத இமயமலையிலே மத்தியில் கங்கை மட்டும் அசைந்து கொண்டு இருக்கிறது. இமயம் உறுதியைக் காட்டுகிறது; கங்கை கருணையைக் காட்டுகிறது. அந்தத்

திடப்பிரக்ஞையிலே கருணை பிரவாகமாக - வெள்ளமாக ஓடிக்கொண்டிருக்கிறது.

நாங்கள் கங்கா ஸ்நானத்திற்கு என்று எவ்வளவு சிரமப்பட்டு ஆயிரம் மைலுக்கு அப்பாலிருந்து வந்திருக்கிறோம். இன்று புனித கங்கையில் ஸ்நானம் செய்து குருநாதரை தரிசித்து ஆசி பெற்றோம்.

சிவானந்த தபோநிதியவர்கட்கும், சிதானந்த குருநாதருக்கும் என் வணக்கத்தையும், நன்றியையும் பல்காலும் தெரிவித்துக் கொண்டு அமைதியுறுகிறேன்.

*உருவா யருவா யுளதா யிலதாய்*
*மருவாய் மலராய் மணியா யொளியாய்க்*
*கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்*
*குருவாய் வருவா யருள்வாய் குகனே.*

*நமப் பார்வதி பதயே - ஹர ஹர மகாதேவா*
*சற்குரு சிவானந்த மகராஜ்க்கு - ஜே !*
*சற்குரு சிதானந்தா மகராஜ்க்கு - ஜே !*
*ஓம் சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!*




---


வெளியிடுவோர்

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம் - சேலம் மாவட்டம்

விலை ) 2001 ரூ. 10-00

# சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| | | |
|---|---|---|
| சிவானந்தர் அன்றாடம் அருளிய அருள்மொழிகள் (3 பாகம்) ஒவ்வொன்றும் | ... | 80–00 |
| இயற்கை மருத்துவம் | ... | 50–00 |
| ஸமாதியேகம் | ... | 50–00 |
| விடுதலைக்கு ஓர்அறைகூவல் | ... | 40–00 |
| மஹாபாரதக் கதைகள் | ... | 40–00 |
| மனமும் அதன் இரகசியமும் | ... | 40–00 |
| ஆன்மீக சாதனைப் பயிற்சிகள் | ... | 35–00 |
| ஞானியர் வரலாறு | ... | 35–00 |
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | ... | 30–00 |
| பிராணயாம விஞ்ஞானம் | ... | 30–00 |
| பாரதத்தின் தவப்புதல்வர் | ... | 30–00 |
| நீதி நெறிக்கதைகள் | ... | 30–00 |
| உடல் நலமும் ஆரோக்கிய நல்வாழ்வும் | ... | 30–00 |
| சிதானந்தர் வாழ்க்கை வரலாறு | ... | 30–00 |
| யோகாசாரம் | ... | 30–00 |
| சிறுவர்களுக்கு தெய்வீக வாழ்க்கை | ... | 30–00 |
| பிரம்மச்சரியத்தின் இரகசியம் | ... | 30–00 |
| ஆயுர்வேத வைத்தியம் | ... | 25–00 |
| அமுத மொழிகள் | ... | 25–00 |
| குண்டலினி யோகம் | ... | 25–00 |
| பேரின்பம் பெற இதோ வழி | ... | 25–00 |
| எண்ணத்தின் ஆற்றல் | ... | 25–00 |
| ஜபயோகம் | ... | 25–00 |
| எளிய யோக சாதனை | ... | 25–00 |
| பகவத் கீதை (ஸ்லோகமும் அர்த்தமும்) | ... | 25–00 |
| ஞான யோகம் | ... | 20–00 |
| சிவானந்தரின் சித்தி விளையாடல்கள் | ... | 20–00 |
| முருகனின் திருவிளையாடல் | ... | 15–00 |
| ஓம் தியானமும் மாண்டுக்கிய உபநிடதமும் | ... | 15–00 |
| 100 ஆண்டுகள் வாழ்வது எப்படி | ... | 15–00 |
| யோகப் பயிற்சி வழிகாட்டி | ... | 15–00 |
| சாதன சதுஷ்டயம் | ... | 15–00 |
| ஆரோக்கியத்திற்கு ஆசனப்பயிற்சி | ... | 15–00 |
| வீட்டு வைத்தியம் | ... | 10–00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | ... | 10–00 |